# அணிகலன்கள் அகராதி

பதிப்பாசிரியர் – வ.ஜெயதேவன்
தொகுப்பாசிரியர் – ந.ஆனந்தி

மின்னயத்தொகுப்பு
கௌரி கருப்பையா




தொகுப்பு

www.valluvarvallalarvattam.com

| | |
|---|---|
| **அகடச்சக்கரம்** | அரைப்பட்டிகை |
| **அகலமணி** | மார்பில் அணியப்படும் மணிகள் பதித்த அணிகலன்வகை; An ornament inlaid with gems to wear on |
| **அகளதூடம்** | தலையின் உச்சியில் அணியும் அணி வகை; A head ornament |
| **அகி** | கால்களில் மகளிர் அணிந்துகொள்ளும் ஒலியெழுப்பும் சிலம்பு; Tinkling anklets worn by women |
| **அக்க சூத்திரம்** | உருத்திராக்க மாலை |
| **அக்க மாலிகை** | உருத்திராக்க மாலை |
| **அக்க மாலை** | உருத்திராக்க மாலை, செபமாலை |
| **அக்கவடம்** | உருத்திராக்க மாலை |
| **அக்குச்சரி** | கையில் அணியும் சங்கினாலான வளை; Shell-bracelet |
| **அக்குமாலை** | உருத்திராக்க மாலை |
| **அக்குவடம்** | சங்குகளைக் கோத்து கழுத்திலோ இடுப்பிலோ அணியப்படும் மாலை; String of shell-beads worn on the neck or waist |
| **அக்கொழுங்கு** | கழுத்தில் அணியும் சங்கு மணி மாலை; String of shell-beads |
| **அங்க வலயம்** | பாம்பின் தலை வடிவத்தில் அமைந்ததும் பூட்டு வாயைப் பெற்றுள்ளதுமான வாகுவலயம்; An armlet worn on the upper arm with a front piece resembling the cobra's head |
| **அங்கசுத்தம்** | அணிகலன் வகை; An ornament |
| **அங்கதம்** | வாகுவலயம் |
| **அங்கரக்கை** | தாயித்து |
| **அங்கிலி** | அங்குலி |
| **அங்குரீயகம்** | மோதிரம் |
| **அங்குரீயம்** | அங்குரீயகம் |
| **அங்குலி** | கை, கால் விரல்களில் அணியப்படும் மோதிரம்; Finger-ring; toe-ring |
| **அங்குலி முத்திரை** | கணையாழி |
| **அங்குலிகம்** | கைவிரலில் அணிந்துகொள்ளும் மோதிரம்; Finger-ring |

| | |
|---|---|
| **அங்குலியம்** | அங்குலிகம் |
| **அங்குலீகம்** | அங்குரீயம் |
| **அங்குலீயகம்** | அங்குரீயம் |
| **அச்சிராபரணம்** | தலையணி வகை; Head ornament |
| **அச்சுத்தாலி** | உருவம் அழுத்திய பொன் அல்லது பிற உலோகத்தாலான காசுமாலை; Necklace of gold-coins |
| **அஞ்சில்** | தட்டை வடிவான பொன் அணிவகை; Flat jewels |
| **அஞ்சு கட்டிப்பூ** | ஒரு நகை; An ornament |
| **அஞ்சுகொத்து மாலை** | சிறிய உருத்திராக்கங்கள் நூற்றெட்டைப் பொற்கம்பிகளால் கட்டியதும் ஐந்து தொகுதி வடங்களை உடையதும் சிவ பக்தர்கள் கழுத்திலணிவதுமான தாழ்வடம்; A string of 108 rudraksa beads in five strands worn by the devotees of Siva around neck |
| **அஞ்சுமுக வங்கி** | ஐந்து உருண்டைகளைக் கொண்டுள்ளதும் மேல் கையில் அணியப்பெறுவதுமான ஒரு வளையல்; A bangle worn on upper arm with five spherical parts |
| **அஞ்சுமுத்துத்தாவடம்** | ஐந்து முத்துவடங்களாலான கழுத்தணி வகை; A necklace of five strings of pearls |
| **அடிக்கலம்** | சிலம்பு |
| **அடிக்காறை** | திருவடிக்காறை |
| **அடுக்காழி** | கல்லிழைத்த மோதிரம்; Ring inlaid with jewels. |
| **அட்சமாலிகை** | உருத்திராக்க மாலை |
| **அட்சமாலை** | உருத்திராக்க மாலை, செபமாலை |
| **அட்டி** | அட்டிகை |
| **அட்டிகை** | (பெரும்பாலும் கல் பதித்து) நடுவில் பதக்கம் தொங்கும்படி கழுத்தோடு ஒட்டி அணியும் நகை; Closely fitting necklace of gold wires or of precious stones |
| **அட்டியல்** | அட்டிகை |
| **அணி** | அணியப்படும் அணிகலன், ஆபரணம், நகை; Ornament; jewel |
| **அணிகம்** | அணிகலன் |

| | |
|---|---|
| **அணிகலம்** | அணிகலன் |
| **அணிகலன்** | அழகுக்காகவோ செல்வநிலையைக் காட்டவோ பண்பாட்டு மரபுக்காகவோ தரித்துக் கொள்ளப்படும் நகை; Ornament; jewel |
| **அணியல்** | நகை, முத்துமாலை |
| **அணிவடம்** | கழுத்தில் அணியும் அணிகலக் கோவை; Ornamental string of jewels Necklace |
| **அணிவலயம்** | வாகுவலயம் |
| **அண்டு** | மணிவடம் முதலியவற்றின் உரு; Unit in a string of beads; link in a chain |
| **அண்ணாக்கயிறு** | அரைஞாண் |
| **அண்ணாக்கவுரு** | அரைஞாண் |
| **அத்த கடகம்** | வளையல் |
| **அத்தம்** | பொன் |
| **அத்தவலயம்** | கைவளை |
| **அத்திக்காய்க்கொலுசு** | சுற்றிலும் அத்திக்காயின் வடிவிலமைந்த கால் கொலுசு வகை; A kind of foot chain |
| **அத்து** | அரைப்பட்டிகை |
| **அந்தளகம்** | கவசம் |
| **அந்தளம்** | கவசம் |
| **அந்துகம்** | சங்கிலி |
| **அந்தூகம்** | அந்துகம் |
| **அபரஞ்சி** | புடமிட்ட பொன்; Refined gold |
| **அபரம்** | கவசம் |
| **அபிடேகம்** | தலையணி வகை, கிரீடம்; A kind of crown |
| **அபிஷேகம்** | அபிடேகம் |
| **அம்பு** | வளையல் |
| **அரக்கு வளையல்** | மகளிர் அணியும் அரக்கினால் செய்யப்பட்ட கைவளை, கங்கணம்; Lac bracelet covered by thin brass leaf tinsel |

| | |
|---|---|
| **அரக்குக்கொப்பு** | காதின் மேல் மடலில் போடும் அணிகலன் வகை, காதணி வகை; An ear stud worn on the upper part of the ear |
| **அரசிலை** | அரைமூடி, மூசாடு இனத்தவர் திருமணத்தின் பொழுது அணிந்துகொள்ளும் அரச இலை வடிவிலான தங்கத்தகட்டினை நூலில் கோத்த அணிவகை, எருத்தின் தலையில் அணிவிக்கும் அரச இலை வடிவ அணி; A wedding jewel in the shape of pipal leaf worn by Mucatu women; Ornament for the head of bull in the shape of a pipal leaf |
| **அரசிலை முருகு** | காதணி வகை; An ear-ornament |
| **அரசிலைத் தூக்கம்** | அரைமூடி |
| **அரசிலைத் தொங்கல்** | அரசிலைத்தூக்கம் |
| **அரசிலைத்தாலி** | தாலிவகை; A mangalya in the form of pipal leaf |
| **அரசிலைப் பஞ்சாயுதம்** | திருமாலின் ஐம்படைகள் வடிவில் குழந்தைகள் அணிந்துகொள்ளும் பொன்னாலான கழுத்தணி; A figleaf-shaped gold ornament worn by children or women with the tali, showing in relief the five weapons of Visnu |
| **அரசிலைப் பொன்அடர்** | அரைமூடி |
| **அரடா** | அணிகலனின் எடுப்பான விளிம்பு; Projecting border of a jewel |
| **அரணாக்கயிறு** | அரைஞாண் |
| **அரணாக்கவுறு** | அரைஞாண் |
| **அரதனம்** | இரத்தினம் |
| **அரத்தம்** | பவளம், பொன், இரத்தினம் |
| **அரவக்கழல்** | வீரக்கழல் |
| **அரவச்ச ரி** | பாம்பு வடிவில் செய்யப்பட்ட வளையல்; Bracelet resembling a Cobra |
| **அரவம்** | மாணிக்கம் முதலிய மணிகளை உள்ளீடாகக் கொண்ட பாம்பு வடிவிலான ஒருவகைச் சிலம்பு; A snake-shaped anklet with gems inside so as to make it tinkle |
| **அராகம்** | அராகி |

| | |
|---|---|
| அரி | சிலம்பின் பரல், சிலம்பு, பொன், மரகதம், வைரம்; Pebbles or gems or pieces of metal put into an anklet to make it tinkle |
| அரிக்குழை | மகரக்குழை |
| அரிச்சதங்கை | பரலிட்ட கால் அணிகலன்; Anklet with tinklets |
| அரிணம் | பொன் |
| அரிதுளைப்பான் | மகளிர் காதில் அணியும் ஒருவகை அணிகலன்; A kind of ear ornament worn by women |
| அரிப்புச்சரி | காதணியின் ஒரு பகுதியான தொங்கல் வகை; An ear pendant |
| அரிப்பொற்கிண்கிணி | தவளைக் கிண்கிணி |
| அரியகம் | மகளிர் அணியும் காலணி வகை; A kind of food-ring worn by women |
| அரியாயோகம் | அரைப்பட்டிகை |
| அருகாழி | கால் விரலில் அணியும் மோதிரம், கைவிரல் மோதிர வகை; Toe ring |
| அருகுகண்ட ம் | பதக்க அணிவகை; A kind of pendant |
| அருங்கலம் | மங்கல அணியான தாலி, நகை, ஆபரணம், கிரீடம்; Mangalya |
| அருங்கலன் | அணிகலப்பொது; Ornament in general |
| அருச்சுநம் | பொன் |
| அருணம் | பொன் |
| அருணால் | பெண்க ளின் தலையணிகளுள் ஒன்று; A kind of head ornament |
| அருத்தம் | பொன் |
| அருநெல்லிக்காய் மாலை | சிறு நெல்லிக்காய் வடிவிலான உருப்படிகளைக் கோத்த சரம்; A chain of beads resembling nelli fruits |
| அரும்பு | அணிகளின் அரும்பு வேலை; Filigree work in imitation of buds |
| அரும்புச்சரம் | மலர் மொட்டு வடிவில் பொன்னால் செய்து, பொன் சரட்டில் கோக்கப்பட்ட ஒரு கழுத்தணிகலன்; Necklace made up of golden buds |

| | |
|---|---|
| **அரும்புமணி** | பொன்னால் செய்யப்பட்டதும் சிறுசிறு மணிகளைக் கொண்டதுமான கழுத்தணி வகை; Necklace of gold beads set with granules of gold |
| **அரும்புவளையம்** | தாழ்வடமணிகளின் இடையில் கோக்கும் வளையம்; Gold or silver rings interspersed with beads in rosary |
| **அருவடச்சுரிவு** | அணிவகைகளுள் ஒன்று; A kind of |
| **அரைக்க ச்சை** | அரைக்கச்சு. |
| **அரைக்கச்சு** | இடைப்பட்டிகை |
| **அரைக்காப்பு** | அரைஞாண் |
| **அரைக்குழல்** | அரைஞாணிற் கோத்து அணியும் மந்திரத்தகடு அடைத்த குழல், தாயத்து; A pendant in the waist cord inside which a mystic scroll is kept |
| **அரைச்ச தங்கை** | பொன் அல்லது வெள்ளியாலானதும் குழந்தைகளின் இடுப்பில் கட்டப்படுவதுமான ஒலிக்கும் மணிகள் கோத்த அணிவகை; String of tinkling beads worn by children around the waist |
| **அரைச்சலங்கை** | அரைச்சதங்கை |
| **அரைஞாணம்** | அரைஞாண் |
| **அரைஞாண்** | ஆண்களும் குழந்தைகளும் இடுப்பில் கட்டிக்கொள்ளும் கயிறு அல்லது பொன் மற்றும் பிற உலோகத்தால் ஆன வடம்; A thin cord or metallic string worn around the waist by men and children. |
| **அரைஞாண்கயிறு** | அரைஞாண் |
| **அரைஞாண்கொடி** | அரைஞாண் |
| **அரைஞாண்மணி** | அரைச்சதங்கை |
| **அரைத்தொடர்** | அரைஞாண் |
| **அரைநாண்** | அரைஞாண் |
| **அரைநூல்** | அரைச்சதங்கை, மேகலை, அரைஞாண் |
| **அரைநூன்மாலை** | மேகலை |

| | |
|---|---|
| **அரைப்பட்டிகை** | ஆடையின் மேற்பகுதியில் அணியும் பொன் அல்லது வெள்ளியாலான இடையணி வகை, வீரர் வாள் செருகுவதற்கு இடுப்பில் அணியும் பட்டிகை; Gold or silver girdle or waist-belt worn by women over their dress; Sheath; scab bard |
| **அரைமணி** | அரைச்சதங்கை |
| **அரைமூடி** | பெண் குழந்தைகளின் அற்றம் என்னும் அம்மணம் மறைப்பதற்காக இடுப்புச் சங்கிலியில் கோக்கப்பட்டிருக்கும், அரசிலை வடிவிலான உலோகத் தகடு; Pipal leaf shaped plate of glass or metal worn by little girls to cover their nudity |
| **அரையணி** | அரைத்தொடர் |
| **அரைவடம்** | அரைச்சதங்கை |
| **அரைவட்ட** | அரைமூடி |
| **அர்க்கம்** | பொன் |
| **அர்ணாக்கொடி** | அரைஞாண் |
| **அர்ணாள்** | அரைஞாண் |
| **அலுக்கு** | அலுக்குத்து |
| **அலுக்குத்து** | இசுலாமியப் பெண்க ள் அணியும் காதணி; An ear ornament worn by Mohammedian women |
| **அலுங்கு** | மணிமுடியென்னும் மகுட வகையில் செதில் போன்ற மலரணி உறுப்பு; A part of the crown |
| **அல்குற்காசு** | அரைஞாண்மணி |
| **அல்லக் காதுத்தளுக்கு** | பச்சைக்கல் முருகுவை அடுத்துப்போடும் காதணி; An ear stud |
| **அவதஞ்ச ம்** | செவிமலர்ப்பூ, தலையணி வகை; A kind of hair disc |
| **அவிடேகம்** | அபிடேகம் |
| **அவுல்சரம்** | நகை |
| **அழகுகுளிசம்** | கழுத்தணியில் கோக்கப்பெறும் தாயித்து; Amulet worn as an ornament on the neck |
| **அளகக்கொடி** | அளகவல்லி |

| | |
|---|---|
| **அளகவல்லி** | முடி புரளாது காக்கும்படி காதணியில் இருந்து முடியில் மாட்டிக்கொள்ளும் ஓர் அணிகலன், மயிர்மாட்டி; Hair hook; an ornament connecting the ear with the hair |
| **அனந்த முடிச்சு** | பெண்கள் அணியும் காதணி வகை; A kind of womans ear ornament |
| **அனந்தம்** | பொன் |
| **அன்னக்கொப்பு** | காதின் மேல் விளிம்பில் அணியும் அன்னத்தின் வடிவிலான அணிகலன்; Ear ornament with design of swan worn at the top of the helix |
| **அன்னப்பூ** | பெண்கள் அணியும் அன்னத்தின் வடிவிலான தலையணி வகை; An ornament worn on the head by women |
| **அன்னம்** | பதக்கமாகவோ சடைவில்லையாகவோ அணியப்படும் அன்னத்தின் வடிவுடைய அணிகலன் வகை; An ornament in the form of swan used either as a pendant of the necklace or a head decor |
| **அன்னவில்லை** | அன்னத்தின் வடிவு கொண்ட தலையணி வகை; A head ornament |
| **அஸ்த கடகம்** | அத்த கடகம் |
| **ஆக்க ம்** | பொன் |
| **ஆசை** | பொன் |
| **ஆடகம்** | முகப்பில் மாணிக்கமும் பத்திகளில் வைரமுமாகப் பல்வேறு மணிகள் பதிக்கப்பெற்று விளிம்புகளில் பூவேலைப்பாடு செய்யப்பட்ட முன்கைப் பொன்வளை, நால்வகைப் பொன்வகைகளுள் ஒன்று; A bangle inlaid with rubies diamonds etc and finished with floral designs; One of four kinds of gold reputed to be of a greenish hue and likened to the wings of a parrot |
| **ஆடுகொப்பு** | காதின் மேல் பகுதியில் அணியும் மகளிர் அணி வகை; A kind of gold earring worn by women |
| **ஆடைக்கட்டு** | இடுப்பில் கட்டியிருக்கும் ஆடை நெகிழாதிருக்க அணியும் ஆபரணம்; Waist belt |

| | |
|---|---|
| ஆணிப்பொன் | மாற்று உயர்ந்த பொன்; Gold of the finest quality |
| ஆணிமுத்து | மேன்மையான கெட்டி முத்து; Pearl of the finest quality |
| ஆணைவட்டம் | குதிரை அணிகளுள் ஒன்று; An ornament for |
| ஆதரம் | சிலம்பு |
| ஆபரணம் | அணிகலன் |
| ஆமைத்தாலி | கூர்மாவதாரத்தை நினைவூட்டுவதாக வைணவர்கள் அணியக்கூடிய ஆமை வடிவமுள்ள தாலி; Mangalya in the form of a turtle to remember the kurma avathara of Visnu. |
| ஆரகேரம் | வாகுவலயம் |
| ஆரக்கோவை | முத்து மாலை |
| ஆரப்பூண் | முத்துமாலை |
| ஆரமணி | இரத்தின மாலை |
| ஆரம் | முத்துமாலை, முத்து, பதக்கம், வளையல், ஒன்றன் கீழ் ஒன்றாகத் தொங்கும் சரங்களை இணைத்த பொற்சங்கிலி; A golden chain of many strings arranged one beneath the other. |
| ஆரவடம் | முத்துமாலை |
| ஆலங்காய்க் கொலுசு | சுற்றிலும் ஆலங்காயின் வடிவிலமைந்த கால் கொலுசு வகை; A kind of fort chain with the sides decorated with the beads in the form of banyan fruits. |
| ஆவாபகம் | கைவளை |
| ஆவாபம் | ஆவாபகம் |
| ஆழி | வாகுவலயம், கைவிரல் மோதிரம், காலில் அணியும் மோதிரம், மெட்டி, மிஞ்சி; Finger ring; Toe ring |
| ஆழிக்காப்பு | அழகிய மணிகள் பதிக்கப்பட்டு வட்டவடிவில் செய்யப்பட்டதும் பொன்னாலானதும் காலில் அணியப்படுவதுமான அணி வகை, காப்பு; A foot ring inlaid with jewels |
| ஆழிமணி | மோதிரத்தில் பதித்துள்ள மாணிக்கம்; The emerald inlaid in a ring |
| ஆழிவித்து | முத்து |

| | |
|---|---|
| **ஆறுகட்டி** | திருமடத்தின் தலைவர்கள் காதிலணியும் ஆறு சிறிய உருத்திராக்கங்களாலான காதணிவகை; An ear-ring worn by the head of Saiva institution consisting of six rudraksa beads |
| **ஆனைமயிர்க்காப்பு** | யானை வால்மயிரையும் மெல்லிய பொற்கம்பியையும் முறுக்கிச் செய்யப்படும் கைவளை; Bracelet of a thin golden wire with the hair of an elephant's tail |
| **இசை** | பொன் |
| **இசைக்கழல்** | தேர்நூறு, குதிரை ஆயிரம், யானை நூறு, காலாள் பதினாயிரம் போரில் மடிய, வென்ற வேந்தன் இடக்காலில் அணியும் வீரவெண்டயம் என்னும் அணி; An ornament worn on the left leg by a king who won the battle by killing 1000 horses 1000 elephants 10 000 soldiers and destroyed 100 chariots |
| **இசைநூபுரம்** | போரில் யானையைக் கொன்ற வீரன் வலக்காலில் அணியும் ஒற்றை வீரக்கழல்; A single anklet worn on the right leg by a mighty warrior who among other deeds of valour and has also killed an elephant |
| **இசைபுனை** | வீரர் இடக்காலில் அணியும் அணிகலன் வகை, சங்கிலி; A honorific bangle worn on the left leg by warriors |
| **இசைமணி** | போரில் பத்தாயிரம் பேரைக் கொன்ற வேந்தன், வலக்காலில் அணியும் பொன்னாலாகிய வீரகண்டை; Tinkling golden anklet worn on his right leg by a king who has slain 10, 000 soldiers in battle |
| **இசைவளை** | குதிரைநூறு கொண்ட போர்க்களத்தில் போரிட்டு வென்ற மறவர் கால்பெரு விரலில் அணியும் மோதிரம்; A toe ring worn by a warrior who had won a battle of 100 horses |
| **இடங்க** | சங்கிலி |
| **இடத்திருவடிநிலை** | கடவுள் திருமேனிகளுக்கு இடக்காலில் இடும் உறை, பாதுகை; The foot wear offered to deities in metal |
| **இடுக்குவளையல்** | கெட்டிக்காப்பு |

| | |
|---|---|
| **இடைக்கட்டு** | தெய்வத்திருமேனியின் இடையில் முன்பகுதியில் கட்டப்படும் ஓர் அணிகலன், அரைக்கச்சு; Front plate an adornment of idols so called from its being fastened in the middle |
| **இடைக்காற்பீலி** | பொதுவாகக் கால் சுண்டுவிரலுக்கு அடுத்துள்ள விரலில் பரதவ மகளிர் அணியும் அணி வகை; A toe ring worn on the toe next to the little toe usually by the women folk among the paratava community. |
| **இடைச்சரி** | உத்திராக்கம் முதலியவற்றின் இடையில் கோக்கும் மணி; Armlet worn by men as an ornament on the upper arm |
| **இடைச்சூரி** | உருத்திராக்கம் முதலியவற்றின் இடையில் கோக்கும் மணி; Gold or silver beads interspersed in a rosary or rudraksa tulasi |
| **இடைச்செறி** | துடையில் அணியப்படும் அணிவகை, குறங்குசெறி, ஒரு மோதிரம் அணிந்தவிரலில் மீண்டும் அணியும் மோதிரம்; An ancient thigh ornament; A second ring on a finger worn to keep another ring in place |
| **இடைப்ப ட்டிகை** | இடுப்பில் அணியும் அணிவகை; Waist band; girdle |
| **இடைப்பூட்டு** | இடைப்பட்டிகை |
| **இடைமணி** | மேகலை |
| **இடையாபரணம்** | ஒட்டியாணம் |
| **இட்ட டிக்கை** | காது மடல்களில் அணியும் பாம்படம், தண்டட்டி முதலிய நகைகளோடு சேர்ந்ததும், நீண்டு தொங்குவதுமாகிய காதணி வகை; An old fashioned ear ornament; one of many ornaments worn through the earlobes |
| **இட்ட டுக்கி** | இட்டடிக்கை |
| **இதடக்கு** | அணியுறுப்பு வகை; A part in Jewels |
| **இதயவாசனை** | மன்னர்களால் அணியப்பெற்ற ஒரு மார்பணி; An ornament worn by kings in their chest |
| **இந்திரநீலக்கடிப்பினை** | காதில் அணியும் நீலமணித் தொங்கல்; A pair of earrings with a sapphire as pendant |
| **இந்திரநீலம்** | நீலம் |
| **இந்திராணிப்பு** | கையணியின் ஓர் உறுப்பு; A part of a Bracelet |

| | |
|---|---|
| **இரசதம்** | அரைப்பட்டிகை, முத்துமாலை, கழுத்தணி, வெள்ளி, பொன்; Necklace |
| **இரசநை** | இரசனை |
| **இரசமணி** | நோய் முதலியவை நீங்கக் காப்பாக அணியப்படும் இரசங்கட்டியமணி; பாதரசமணி; Hard globuse of mercury prepared with incantations and worn as an amulet for health purposes |
| **இரசனை** | காஞ்சி |
| **இரசிகை** | மாதர் இடையணி; Waist chain worn by women |
| **இரசிதம்** | வெள்ளி |
| **இரசுமிமாலை** | ஐம்பது அல்லது அறுபது சரடுகளில் முத்துகள் கோக்கப்பட்டு உருவாக்கப்பட்ட கழுத்தணி வகை; Necklace of 50 or 60 threads, especially of pearls |
| **இரட்டைக்குண்ட ட்டிகை** | இரட்டைப் பொன்மணி உருண்டைகள் அமைந்ததும் பெண்கள் கழுத்தை ஒட்டி அணிவதுமான; Necklace of double gold beads |
| **இரட்டைத்திருவுழுத்து** | உழுத்து |
| **இரட்டைமணி** | அணிவகை; An ornament |
| **இரட்டைவடச் சங்கிலி** | இரண்டு தனித்தனியான சங்கிலியை ஒரு முகப்பால் இணைத்துச் செய்யப்பட்ட கழுத்தணி வகை; Two stringed chain |
| **இரட்டைவாளி** | இரட்டைவடச் சங்கிலி |
| **இரணம்** | பொன், மாணிக்கம் |
| **இரணியம்** | பொன் |
| **இரதம்** | அரைஞாண், மேகலை |
| **இரதனம்** | அரைஞாண் |
| **இரத்த விந்து** | மாணிக்க வகையாகிய குருவிந்தம்; Corundum alumina ina crystalline state |
| **இரத்தம்** | பவளம் |
| **இரத்தின கடகம்** | மகரமீன் கவ்விய கொடி வடிவில் மணிகள் இழைத்துச் செய்யப்பட்ட பொன்னாலான கையணி வகை; Armlet inlaid with jewels |

| | |
|---|---|
| **இரத்தின குண்ட லம்** | மணிகள் இழைத்துப் பொன்னால் செய்யப்பட்ட மகளிர் காதணி; Golden earning unlaid with jewels and worn by women |
| **இரத்தின மகுடம்** | மணிமுடி |
| **இரத்தின மோதிரம்** | மணிகள் இழைத்துச் செய்யப்பட்டதும் விரலில் அணியப்படுவதுமான மோதிர வகை; Finger ring inlaid with precious gems |
| **இரத்தின வங்கி** | மணிகள் பதித்துப் பொன்னால் செய்யப்பட்ட தோளணி வகை; Bracelet worn on the upper arm inlaid with precious gems |
| **இரத்தின வளையம்** | மணிகள் இழைத்துச் செய்யப்பட்டதும், காது, மூக்கு ஆகியவற்றில் அணியப்படுவதுமான அணி வகை; A jewelled ring worn on ear and nose |
| **இரத்தினபந்த உபக்கிரீவம்** | உள்கழுத்தில் அணியும் மணிகள் இழைத்த அணிவகை, அட்டியல்; Closely fitting necklace unlaid with precious stones |
| **இரத்தினப்ப ணி** | மணிகள் பதிக்கப்பட்ட அணிகலன்; Jewel inlaind with precious stones. |
| **இரத்தினமாலை** | மணிவடம் |
| **இரத்தினம்** | மணி |
| **இரத்ந பட்டிகை** | மணிக்கற்கள் பதித்த அரைக்கச்சை; Girdle inlaid with precious stones |
| **இரத்ன கண்டி** | மணிக்கற்கள் இழைத்த கழுத்தணி வகை; Ruby Necklace |
| **இரத்ன மாலிகா** | மணிகள் பதித்த மாலை; Necklace inlaid with precious stones |
| **இரத்ன மோதிரம்** | இரத்ன மோதிரம் |
| **இரத்ன வளையல்** | மணிகள் பொருத்தப்பட்ட கையணி; Bracelet inlaid with gems |
| **இரவையட்டிகை** | வைர அட்டிகை; Attikai set with diamonds |
| **இரஜ்ஜு** | திருமணத்தின் அடையாளமாகக் கருதப்படும் தாலிச்சரடு; Cord of the marriage badge |
| **இரஸனா** | மகளிரது இடை அணிவகை; A variety of girdle for ladies |

| | |
|---|---|
| **இராக்க டை** | ராக்கடி |
| **இராக்கடி** | மகளிர் தலையில் அணிந்துகொள்ளும் சடைவில்லை வகை; An ornament worn by women on the crown of the head |
| **இராக்கிடி** | ராக்கடி |
| **இராக்குடி** | சடைவில்லை |
| **இராக்கொடி** | ராக்கடி |
| **இராக்கோடி** | ராக்கடி |
| **இராசமுடி** | மகுடம் |
| **இராசாவர்த்தம்** | தலையணி வகை; Head ornament |
| **இராணிச்சங்கிலி** | ராணிமுடிச்சுச் சங்கிலி |
| **இராணிமுடிச்சுச் சங்கிலி** | நீண்ட சங்கிலி வகை; A kind of long chain |
| **இராவிரேகு** | தலையில் குழந்தைகளும் பெண்களும் அணிந்துகொள்ளும் இலை வடிவிலான அணி, அரைமூடி; Jewel in the shape of a bo leaf worn by children and women on the forehead |
| **இராவிரேக்கு** | அரைமூடி |
| **இராஜவந்தம்** | அணிவகை; A jewel |
| **இருட்க ண்டம்** | கழுத்தணி வகை; A necklace |
| **இருப்புக்கச்சை** | போர்க்காலத்தில் வீரர்கள் தங்கள் இடையில் அணியும் இரும்பாலான அணி; Iron girdle worn by warriors |
| **இருப்புச்சீரா** | இரும்பால் செய்யப்பட்ட சட்டை; Iron coat of mail |
| **இரும்பு** | பொன் |
| **இரும்புச் சுவடு** | இரும்பால் செய்யப்பட்ட கவசம்; Armour |
| **இரும்புச்சுற்று** | இரும்பாலாகிய மோதிரம்; Iron ring |
| **இலச்சினை** | முத்திரை மோதிரம் |
| **இலம்பகம்** | நெற்றியில் தொங்கும்படி தலையில் அணியும் தலைக்கோலம் என்னும் அணிவகை; Ornametal chain for a womens forehead |
| **இலம்பமானம்** | கழுத்தில் தொங்கும் தாழ்வடம்; Long chain |

| | |
|---|---|
| **இலம்பம்** | கீழ்நோக்கி அசைந்தாடும்படி அமைந்துள்ள அணிவகை, தொங்கல்; Anything hanging down as a pendulum; pendant |
| **இலம்பானம்** | இலம்பமானம் |
| **இலலாடிகை** | 1. நெற்றிப்பொட்டு, திலகம், நெற்றிச்சுட்டி; A round mark in colour on the forehead நெற்றிச்சுட்டி |
| **இலலாமகம்** | நெற்றிச்சுட்டி |
| **இலலாமம்** | இலலாலம் |
| **இலலாலம்** | அணிகலன் வகை; A kind of jewels, நெற்றிச்சுட்டி |
| **இலவங்கப்பூ** | இலவங்கப்பூ வடிவிலமைந்த) காதணி வகை; An ornament worn on the ear having the design of a clove |
| **இலளிதை** | கழுத்திலணியும் ஒரு வகை முத்தாரம்; A kind of pearl necklace |
| **இலை** | பல்வேறு மணிகள் பதிக்கப்பெற்று பொன்னால் செய்யப்பட்டதும் மகளிர் அணிவதுமான சிறு தலையணி, சடைவில்லை; A small golden disk inlaid with gems worn on hair plait by women |
| **இலைத்தாலி** | இலை போன்ற வடிவமுடைய தாலி; Marriage badge in the shape of a leaf |
| **இலைப்பூண்** | அரசிலை |
| **இலைமுகப்பைம்பூண்** | வெற்றிலைகளால் வடிவமைக்கப்பட்டது போன்ற பொன்னாலான கழுத்தணி வகை; A gold necklace with parts in the form of the betel leaf |
| **இழிகை** | கைச்சரிகை |
| **இழுக்கு** | அணிகலனின் ஓர் உறுப்பு, கொக்கி; The link of a jewel |
| **இழை** | 1. - அணிகலன். பொன்செய் புனை இழை கட்டிய மகளிர் (குறுந். 21; 2). 2. - மங்கலநாண். மதிவேள் கட்டு அன்பின் இழையே அணியாம் எனக்கு (பாரிகாதை, 338). 3. சபதத்தை முன்னிட்டுக் கையில் கட்டும் காப்பு; String tied about the wrist for a vow (W.). |
| **இழைக்கலம்** | தாலி, 1. இழைக்கல மகளிர் இருநூற்றுவ ரொடு (பெருங். 1, 38; 288). |

| | |
|---|---|
| **இனமணி** | மணிகளையுடைய செபமாலை; Jeweled rosary. இனமணி அணிகுவர் அவர் (திருக்காவ, கலம். 4). |
| **ஈகை** | பொன் |
| **ஈடு** | கவசம் |
| **ஈழம்** | பொன் |
| **உடல்** | பொன் |
| **உகிரப்புறவன்** | நகத்தின் மேல் அணியும் அணிவகை; A jewel for nails |
| **உக்கட்டு** | பெண்கள் கழுத்தை ஒட்டி அணியும் ஒருவகை அணிகலன்; அட்டியல் வகை; A necklace of inner neck |
| **உக்க முத்துமணி** | கழுத்துடன் ஒட்டி அணியும் தங்க மணிகளாலான அணிகலன்; Closely fitted necklace of gold beads |
| **உக்கம்** | பொன் |
| **உக்கலச் சங்கிலி** | உக்கட்டு, உட்க முத்துச் சரடு |
| **உக்கா** | உக்காக்கம் |
| **உக்காக்கம்** | இடுப்பில் கட்டும் அரைஞாண், கயிறு; Waist cord |
| **உக்கிட்டு** | உட்கட்டு |
| **உச்சி** | உச்சிப்பு |
| **உச்சிச்சுட்டி** | குழந்தைகளின் நெற்றியில் தொங்கும்படி தலையில் அணியும் ஓர் அணிகலன்; An ornament for the forehead of children. |
| **உச்சிச்சூடை** | தலையில் அணியும் அணிவகை; An ormament for the forehead |
| **உச்சிதிகம்** | மகளிர் முன்கரத்தில் அணியும் வளைவகை; A kind of bangle |
| **உச்சிப்பட்டம்** | தலை உச்சியில் பெண்கள் அணியும் ஓர் அணிகலன்; An ornament worn by maidens an their center head |
| **உச்சிப்பிறை** | பரவ மகளிர் தலையில் அணியும் பிறை நிலவு வடிவிலான ஒருவகை அணிகலன்; Crescent shaped head ornament, a common ornament among women of the parava caste |

| | |
|---|---|
| உச்சிப்பூ | தலையின் உச்சியில் அணியும் மலர் வடிவிலான ஓர் அணிகலன்; A flower shaped jewel worn on the center of the head |
| உச்சிமணிச்சுட்டி | நெற்றிச்சுட்டி |
| உச்சியணி | தலைப்பாகையில் உள்ள அழகிய தொங்கல்; Pendant of a head gear |
| உச்சிவில்லை | சடைவில்லை |
| உடற்கருவி | கவசம் |
| உடற்காப்பு | உடற்கருவி |
| உடற்காவல் | உடற்கருவி |
| உடியாணம் | ஒட்டியாணம் |
| உடைஞாண் | இடுப்பிலுள்ள ஆடை நழுவாமல் இருக்க அதன் மேல் ஆடவர் அணியும் வெள்ளி அல்லது தங்க க் கயிறு; Silver or golden cord worn by men round the waist-cloth to serve as a waist-band and confine the cloth at the waist |
| உடைதாரம் | உடைஞாண் |
| உடைநாண் | உடைஞாண் |
| உடைமணி | இடுப்பில் ஆடையின் மேல் பெண்கள் அணியும் அணிகலன், குழந்தைகளின் இடுப்பில் கட்டும் சிறு மணிகளோடு கூடிய அணிகலன், மேகலை; Jewell girdle worn by women; Waist ornament with bells worn by a child |
| உட்க முத்துச்சரடு | பெண்கள் கழுத்தை ஒட்டியிருக்கும்படி அணியும் பதக்கத்துடன் கூடிய பொற்சரடு; அட்டிகை வகை; A close fitting golden necklace with a pendant |
| உட்கட்டு | பெண்கள் உட்கழுத்தில் அணியும்படி ஒரு பக்கம் நேராகவும் மற்றொரு பக்கம் முக்கோணம் போலவும் உள்ள பல துண்டுகள் கோக்கப்பட்ட பொன்னாலான மணிவடம், பரவச் சிறுமியர் முதலியோர் குழந்தைப் பருவத்தில் அணியுஞ் சிறு தாலி; A necklace in inner neck; A kind of necklace worn especially by parava girls. |
| உட்கழுத்து ஆரம் | உட்கழுத்துச்சரடு |

| | |
|---|---|
| **உட்கழுத்துக்கொடி** | பெண்கள் கழுத்தை ஒட்டியிருக்கும்படி அணியும் பதக்கம் வைக்காத பொற்சரடு; A necklace of inner neck without pendant |
| **உண்ணீடம்** | அரசர் முதலியோர் தலையில் அணியும் மணிமுடி, கிரீடம்; Crown |
| **உதரபந்தம்** | பொன் அல்லது வெள்ளியால் செய்யப்பட்டதும் ஆண்கள் இடுப்பில் அணிவதுமான அணிகலன், அரைப்பட்டிகை; Girdle or belt made of gold or silver and worn over the dress by men |
| **உதரபந்தனம்** | உதரபந்தம் |
| **உதரபெந்தனம்** | உதரபந்தனம் |
| **உத்த ண்டமணி** | பெண்கள் கழுத்தில் அணியும் பொன்மணிகளால் ஆன அணிவகை; A womans necklace made of gold beads |
| **உத்தஞ்சம்** | செவமலர்ப்பூண் |
| **உத்தண்டால்** | உத்தண்ட மணி |
| **உத்தாண்டமாலை** | உத்தண்டமணி |
| **உத்தி** | நெற்றிச்சுட்டி, இலக்குமி உருவம் பொறித்த தலையணி; Pendant of an ornament; A head-ornament of women with the figure of Lakshmi embossed upon it |
| **உத்திகை** | உத்தி |
| **உபக்கிரீவம்** | அடிக்கழுத்தின் தொண்டைக்குழியில் பெரிய மணியும் அதன் இருபுறத்திலும் சிறுமணிகளும் அமைய ஆண் சிற்பங்களின் உட்கழுத்தில் அமைக்கும் அணிகலன்; A necklace sculptured along with the statue as a big gem in the center with smaller ones on both side |
| **உமிசம்** | இரத்தினக்கல் பதிப்பதற்கு அமைக்கப்படும் நகைக்கட்டு; Groove in the frame work of a jewel to inlay a gem |
| **உம்மிசம்** | உமிசம் |
| **உரதூதிகை** | முத்துமாலை |

| | |
|---|---|
| **உருக்கு** | படகர் இனத்தவர் தம் இடக்கை மோதிர விரலில் அணிந்துகொள்ளும் அணி; A ring worn on the ring finger of the left hand by Badaga people |
| **உருக்குமணி** | பொற்குண்டுகளை இணைத்துச் செய்து பெண்கள் அணியும் காதணித் தொங்கல்; Solid globules or gold soldered together around a ring and worn by women as ear drops |
| **உருட்டு** | கால் விரலில் பெண்கள் அணியும் மோதிரம், பண்டைக்காலத்தில் கைக்கட்டை விரலில் ஆடவர் அணியும் மோதிரவகை; Ring for the toes of women; Ring for the thumb |
| **உருட்டு மோதிரம்** | உருட்டு |
| **உருத்திராக்க மாலை** | உருத்திராக்கக் கொட்டைகளைப் பொன் அல்லது வெள்ளிச் சரட்டிலோ நூற் கயிற்றிலோ கோத்து உருவாக்கப்படும் கழுத்தணி வகை; String of rudraksa beads |
| **உருத்திராக்கச்சுரி** | உருத்திராக்க மாலையில் மணிகளுக்கு இடையே கோக்கப்படும் சதுர அல்லது வட்டத் தகட்டிணைப்பு; The square or round plates of metal interspersed in between the rudraksha beads |
| **உருத்திராக்கப்பணி** | உருத்திராக்க மாலை |
| **உருத்திராக்கம்** | சைவர்கள் புனிதமாகக் கருதி அணிந்து கொள்வதும் சிவபெருமானின் கண்ணாகக் கருதப்படுவதுமான உருத்திராட்ச மணி; Rudraksa nuts worn as sacred beads and used in rosaries by saivas so called because these beads represent the eyes of Siva |
| **உருத்திராக்ஷக்காறை** | நெருக்கமாகக் கோத்த உருத்திராக்கச் சரம்; A string of rudraksa |
| **உருத்திராக்ஷச்சுரி** | உருத்திராக்கச்சுரி |
| **உருத்திராக்ஷத்தாழ்வடம்** | அக்குமாலை |
| **உருத்திராட்சகண்டி** | உருத்திராட்சகண்டிகை |
| **உருத்திராட்சகண்டிகை** | உருத்திராக்க மாலை; String of rudraksa beads |

| | |
|---|---|
| **உருத்திராட்சக்கடுக்கன்** | உருத்திராக்க மணியைக் கொண்டு செய்யப்பட்ட காதணி வகை; Ear ring made up of rudraksa |
| **உருபு** | தாலி முதலியவற்றில் சேர்க்கும் உரு; The items like gold balls chain pieces etc stringed in Mangalya |
| **உருமணி** | மந்திரங்களை உருவேற்றுவதற்கு உதவும் மாலை, செபமாலை; Rosary |
| **உருவல்** | காதணி வகை; Kind of ear drops |
| **உரூப்பியம்** | வெள்ளி நகை, வெள்ளி; Jewel made up of silver |
| **உரை** | பொன் |
| **உரோகிதம்** | முத்தாரம் |
| **உலோசகம்** | காதணி, நெற்றிச்சுட்டி |
| **உலோசம்** | உலோசகம் |
| **உழுத்து** | பண்டைக்கால அணி வகை; An ancient ornament |
| **உளை** | குதிரையின் தலையாட்டம் என்னும் அணி; Hair plume on a horses head; camara |
| **உறை** | பொன் |
| **ஊருதாமம்** | பல வளைவுகளுடன் இடுப்பிலிருந்து துடைவரை தொங்கும்படி இடையணியில் இணைந்துள்ள முத்துச்சரம்; Amulti stringed chain of pearles connected to the waist band reaching up the thighs |
| **ஊர்மிகை** | மோதிரம் |
| **ஊர்மிசை** | மோதிரம் |
| **எட்டுக்கல் பேஸ்திரி** | பேசரி |
| **எண்கோவை** | எட்டுக் கோவைகளாலாகிய மகளிர் இடையணி; A waist band with 8 strings. காஞ்சி |
| **எண்ணாற்காழ்நிரை** | முப்பத்தாறு கோவை கொண்ட விரிசிகை என்னும் மகளிர் இடை அணிகலன்; A girdle made up of 36 strings worn by ladies |
| **எண்ணெய்மணி** | கழுத்தில் அணியும் பூவேலைப் பாடுகளற்ற ஒருவகை மணி; Kind of plain bead used in necklace |

| | |
|---|---|
| **எயிற்றுத்தாலி** | எயினசாதிப்பெண் அணியும் மங்கல நாணாகிய புலிப்பல் தாலி; The mangalya of hunter women, made up tigers took |
| **எருக்கிலைமணி** | பரவமகளிர் இடுப்பில் அணியும் கழுத்தணி வகை; Necklace worn by parava women |
| **எருக்கிலைமாலை** | எருக்கிலைமணி |
| **எலுமிச்சங்காய் ஓலை** | எலுமிச்சை வடிவில் அமைந்த பொன்குண்டிலான தொங்கட்டான்; An eardrop in the shape of lemon |
| **எழுகோவை** | மேகலை |
| **ஏகவடம்** | ஏகாவலி |
| **ஏகவட்ட ம்** | ஏகவடம் |
| **ஏகவல்லி** | ஏகாவலி |
| **ஏகவாரம்** | ஏகாவலி |
| **ஏகாவலி** | முத்து நிரப்பம் |
| **ஏகாவலி வடம்** | ஏகாவலி |
| **ஏகாவல்லி** | ஏகாவலி |
| **ஏகாவளி** | ஏகாவலி |
| **ஏணிப்படுகால்** | மேகலை |
| **ஏமப்பூண்** | பொன்னாலாகிய அணிகலன்; Gold ornament |
| **ஏமம்** | பொன் |
| **ஏலரிசிமணி** | பரவமகளிர் கழுத்த ணிகளுள் ஒன்று; A kind of necklace worn by parava women |
| **ஏழாங்காப்பு** | பிறந்த ஏழாம் நாளில் குழந்தைக்கு அணிவிக்கும் வெள்ளி முதலியவற்றாலான வளை; Bracelets or anklets of a particular pattern made of copper and silver wire twisted together put on a baby on the seventh day after birth as an amulet |
| **ஏழாநாட்காப்பு** | ஏழாங்காப்பு |
| **ஏறுமுகக்கண்டிகை** | ஏறுமுகவுருத்திராட்சம் |

| | |
|---|---|
| ஏறுமுகவுருத்திராட்சம் | உருத்திராக்க மணிகளை அவற்றின் முகங்கள் ஏறுவரிசையால் அமையுமாறு கோக்கப்படும் மாலை; String of rudraksa beads in which the number of faces of the beads are in ascending order |
| ஏனாதிமோதிரம் | வணிகரில் சிறந்த ஏனாதிப்பட்டத்தார்க்கு அரசர் வழங்கும் மோதிரம்; Ring being the insignia of the title enati given to notable merchants. |
| ஐந்தாலி | இடைக்குலத்தில் ஒரு பிரிவினர் அணியும் தாலி; A kind of tali worn by yadava women. |
| ஐந்துவிரன் மோதிரம் | பரவ மகளிர் ஒரு விரலுக்கு நான்கைந்து வீதம் ஐந்து விரல்களிலும் அணியும் பலவகை மோதிரம்; கரண்டைக்காய் மோதிரம்; Five kinds of finger-rings worn by parava women on the five fingers |
| ஐம்படை | ஐம்படைத்தாலி |
| ஐம்படைத்தாலி | பிள்ளைகளின் கழுத்தில் அணியப்பெறும் திருமாலின் ஐந்துவகை ஆயுத உருக்கள் அமைந்த அணிகலன்; A pendant worn by children in a necklace bearing in relief the five weapons of Vişnu as an amulet |
| ஒக்கட்டு | உக்கட்டு. |
| ஒட்டியாணம் | இடுப்பைச் சுற்றி ஆடையின் மேல் அணிந்துகொள்ளுமாறு பொன் அல்லது வெள்ளியால் செய்யப்படும் அணிகலன்; Gold or silver girdle or belt an ornament worn by women |
| ஒட்டுக்கடுக்கன் | காதில் அணியக்கூடிய சிறு கடுக்கன் வகை; Small ear ring sticking close to the ear |
| ஒட்யாணம் | ஒட்டியாணம் |
| ஒத்து | ஆடவர் முன்கையில் அணியும் காப்புப் போன்றதும் தங்கம் அல்லது வெள்ளியால் ஆனதுமான மெல்லிய வளையம்; A thin bangle made up of gold or silver and worn by men. |
| ஒழுகுசங்கிலி | தொடர்சங்கிலி; A kind of long chain |

| | |
|---|---|
| **ஒற்றை முக வங்கி** | அழகிய முகப்பு வேலைப்பாடுள்ள வங்கி வகை; A type of Bangle worn an upper arm having an ornamental front piece |
| **ஒற்றைத் தாலிமணி** | இறைவித் திருமேனிகளுக்கு அணிவிக்கும் ஒரேயொரு இரத்தினம் மட்டும் அழுத்திய தாலி; Marriage badge inlaid with a single precious stone adorning the deities. |
| **ஒற்றைத்தாலி** | பதக்கம் முதலிய தொங்கல்கள் இன்றித் தாலி மாத்திரமே உள்ள சரடு; Marriage badge without any other accompanying jewels or pendants |
| **ஒற்றைப் பின்னல் அட்டி** | ஒரு சரமாக அமைந்த பதக்கம் இல்லாத அட்டியல்; Single stringed close neck chain |
| **ஒற்றைப்பட்டுமணி** | ஒற்றைவடமணி |
| **ஒற்றைமணி** | ஒற்றைவடமணி |
| **ஒற்றைவட மணி** | ஒரேயொரு சரத்தை மட்டும் கொண்டுள்ளதும் கழுத்திலணிதற்குரியதுமான நீண்ட முத்து மாலை; A single stringed long chain of pearls |
| **ஒன்னப்பூ** | பெண்கள் காதணி வகை; An ear ornament worn by women |
| **ஓசைசெய்தளை** | ஒலிக்கும் காற் சிலம்பு வகை; A tinkling anklet |
| **ஓடாணி** | அணி முதலியவற்றில் மாட்டும் ஆணி; A sliding pin in a metal case; jewel |
| **ஓடியாணம்** | ஒட்டியாணம் |
| **ஓடை** | யானையின் நெற்றியில் அணிவிக்கப்படும் பொன்முகப்படாம், நெற்றிப்பட்டம்; Frontlet for elephants |
| **ஓரை** | அணிகலன் |
| **ஓலை** | 1. காதிலணியும் பனை ஓலைச்சுருள்; Rolled palm leaf used as an ear ornament. அழகு பெறுக ஓலை மருவும் இருகாதை (திருப்பு.91; 1). 2. கற்கள் பதித்துப் பொன்னால் செய்யப்பட்ட காதணித் தொங்கல்; Ornament worn in the lobe of the ear, as of gold often set with precious stones. செம்பொன் ஓலை வீழவும் (சீவக. 1103; 1). |

| | |
|---|---|
| **ஓலைசரம்** | அணிகலன் வகை; A kind of ornament (தாசில்தார் நா.ப. 40). |
| **கங்க ணம்** | 1. நடைபெறும் மங்கல நிகழ்வு முடியும் வரை அல்லது மேற்கொண்ட உறுதியை நிறைவேற்றும் வரை மணிக்கட்டில் கட்டிக்கொள்ளும் மஞ்சள் துண்டு கட்டப்பட்ட கயிறு அல்லது பொன்னணி; காப்புநாண்; A cord tied with a talisinan or piece of turmeric worn around the wrist till a particular auspicious event comes to an end or till the vow taken fulfilled. Goorn Qural கங்கணம் மீது திகழ்ந்த முன்கை (பெரியபு. 10, 60; 3). 2. கைவளையின் ஒரு வகை; Bangle; bracelet; wristlet. கையினிற் கங்கணம் இட்டு (திவ். பெரியாழ், 1, 9, 2; 2). |
| **கங்காபட்டாரகி** | சிவமூர்த்திக்கு அணிவிக்கப்படும் கங்கைவடிவான தலையணி; Head-ornament for the idol of siva, to represent the Ganges (S.1.1. ii, 170). |
| **கசை** | கவசம் |
| **கசை** | காதிலிருந்து பின்புறத் தலைமுடியில் மாட்டுவதற்கு ஏற்ப கொக்கியுடன் கூடிய தலையணி வகை; மயிர்மாட்டி; Hair ornament fastened by a hook from the top of the ear to the back of the head. |
| **கசைவளையயல்** | பொற்கம்பியினால் உருவாக்கப்பட்ட கைவளை; பொற்கம்பிவளை; Bracelets made of braided gold wire |
| **கச்ச ரி** | கைவளை. சுனை குடை வரை அர மகளிர்கள் கச்சரி பச்சோலை எறி திரை நிரை தரு (குலோத். பிள்ளைத். 35). |
| **கச்சிக்குழல்** | தாலியில் கோப்பதற்கு ஏற்ப உட்துளையுடன் உருண்டு அமைந்த ஒரு வகை அணி உறுப்பு; A part of neck ornament (செந். சொற்.). |
| **கச்சு** | ஒரு வகை இடையணி; அரைப்பட்டிகை; Belt; girdle; sash; cummerbund. மள்ளர் ... யாத்த பூங்கச்சு (சீவக. 16; 1-2). |

| | |
|---|---|
| **கச்சை** | 1. - அரைக்கச்சு. மாசுணக்கச்சைபாடி (திருவாச. 9, 19; 3). 2. - கிண்கிணி. காலிற் கச்சை கட்டினது போல் (பெண்மதிமாலை. 115). |
| **கடகத்திரயம்** | கணுக்கைக்கு மேல் அணியப்படும் கேயூரம் போன்ற அணிவகை, நடுவில் அகலமாகவும் மணிகள் பதித்து இரு பக்கங்களிலும் (பூவேலைப்பாடுகளுடன்) மெல்லியதாகவும் அமைந்த மூன்று வளையல்கள் ஒன்றாக இணைந்த அணிவகை; An ornament like keyura; A three banded bangle with a wide jewelled band with flowery side bands all in one. |
| **கடகம்** | பெரும்பாலும் மகர மீன் கவ்விய கொடி வடிவிலான முன்கை அணி; Bracelet worn on the forearm |
| **கடகவளை** | மூன்று யவை கனமுள்ளதும், முழங்கையில் அணியப்படுவதுமான இருபாலார்க்கும் பொதுவான கையணி; A kind of Bracelet |
| **கடயம்** | கடகம் |
| **கடலைமணி** | கடலைவித்துப் போன்ற பொன்மணிகளாலான கழுத்தணி வகை; A kind of necklace with beads resembling bengal gram pulse |
| **கடிகச்சூத்திரம்** | கடி சூத்திரம் |
| **கடிகை** | கட்டுவடம் |
| **கடிகை** | திருமணம் முதலிய சடங்குகளின் போது தீய சக்திகள் தாக்காதிருக்க மணமகனின் வலது கரத்திலும் மணமகளின் இடது கரத்திலும் கட்டப்படும் மஞ்சள் கயிறு, காப்புநாண், ஆண்கள் தோளில் அணியும் அணிகலன், தோள்வளை, பவளத்தால் ஆன தலையணி வகை; A yellow thread worn on the right hand of the groom and the left hand of the bride at the time of marriage as an armlet; A bracelet worn on upper arm by men; A kind of head ornament made up of coral |

| | |
|---|---|
| **கடிகையாரம்** | நாழிகை காட்டும் கருவிகள் போல் செய்து கோத்த மாலை, கழுத்தணி; Golden necklace worn by women in one or more strands resembling a watch chain |
| **கடிசூத்திரம்** | சிங்கத்தலை போன்ற முகப்பினையும் முன்புறம் சிறு சிறு சதங்கைகளையும் கொண்ட, இடுப்பில் அணியும் பொன் பட்டிகை; Waist string |
| **கடிஞாண்** | கடிசூத்திரம் |
| **கடிப்பம்** | காதணி |
| **கடிப்பிணை** | காதின் துளையைப் பெரிதாக்கியபின் அணியும் அணி வகை; A pair of ear rings |
| **கடிப்பு** | கடிப்பிணை, இந்திரநீலத்தையும் இடையிடையே வைர மணிகளையும் அழுத்திச் செய்யப்பட்ட காதணி வகை; An ear ring with sapphire and diamond |
| **கடியாரசரம்** | கடியாரச்சங்கிலி |
| **கடியாரச்சங்கிலி** | கைக்கடிகாரத்தில் மாட்டியுள்ள சங்கிலி, கடிகையாரம்; Watch strap in the form of a chain |
| **கடியாரத்தோடு** | கடிகாரத்தைப் போலக் காட்சியளிக்குமாறு வட்டமாகக் கற்கள் பதித்துச் செய்யப்பெற்ற பெரிய காதணி; கம்மல் வகை; Large ear ring in gold set with jewels resembling a watch |
| **கடியாரவட்டிகை** | கழுத்தை ஒட்டியவாறு மகளிர் அணியும் பொன்னாலான அணி வகை; Womens necklace made of gold wire |
| **கடுகுமணி** | கடுகைப்போன்ற சிறிய பொன் மணிகளால் கோக்கப்பட்ட கழுத்தணி வகை; A necklace of small gold beads in the size of mustard seeds |
| **கடுக்கன்** | காது மடலின் கீழ்ப்பகுதியில், ஆண்கள் அல்லது சிறுவர்கள் அணியும் கல் வைத்துக் கட்டிய காதணி; Ear ring for men |
| **கடுக்கு** | கடுக்கன் |
| **கடை** | கழுத்தணிகலனில் அமைந்துள்ள பூட்டு, பூண்கடைப் புணர்வு; Clasp fastening of neck ornaments |

| | |
|---|---|
| கடைசெறி | வாளை மீன் தன்னைத்தானே கவ்விக்கொண்டிருப்பது போல் அமைந்ததும் கைவிரலில் அணியப்படுவதுமான மோதிர வகை; Finger-ring |
| கடைச்சரி | முன்கையில் அணியும் தளர்வான வளை; The lowest bracelet on the fore arm |
| கடைத்தொழில் | பதக்கத்தின் உறுப்பு, பதக்க மாலை; A part of pendant |
| கடைப்புணர்வு | கடைப்பூண் |
| கடைப்பூட்டு | கடைப்பூண் |
| கடைப்பூண் | அட்டிகை முதலிய அணிகலன்களில் அமைந்துள்ள சங்கிலியின் இருபகுதிகளையும் இணைக்கும் மூட்டுவாய்; Clasp of a necklace |
| கடைமணி | பரவ மகளிர் கையணி வகை, தாலியுடன் சேர்த்தணியும் மணி; Bracelet of parava women; Bead attached to the tali |
| கடையம் | கடகம் |
| கட்டிக்காப்பு | கட்டைக்காப்பு |
| கட்டு உடைக்கலன் | கட்டுக்கடுக்கன் |
| கட்டுக்கடுக்கன் | மணி பதித்த காதணி வகை; Ear-ring set with gems |
| கட்டுத்தாலி | மறவரினத்திலே திருமணம் நிகழ்த்தத்தடை ஏற்படும் போது திருமணவினைகள் பின்னொரு தேதிக்குத்தள்ளி வைக்கப்பட்ட நிலையில் சில நேரங்களில் குழந்தைப் பிறப்புக்குப் பின்னருங்கூடத், மணமகளைக் கணவன் வீட்டுக்குக் கொணர்வதற்காக அனுப்பிவைக்கப்படும் திருமாங்கலியம்; The tali among Maravas which when some impediment arises to prevent the celebration of the marriage, is sent to the bride whereupon she is brought to the house of her husband the completion of the ceremony being deferred to a subsequent date some times even after children have been born |
| கட்டுப்ப வளம் | பவளக் கொடியாலான கைவளை; Coral wristlet |
| கட்டுப்பூட்டு | அணிகலன் |

| | |
|---|---|
| கட்டுவடம் | உருண்டையான பொன்மணிகளை உடைய கழுத்தணி வகை, உருண்டையான பொன்மணிகளை கோத்த கழல்; Necklace of gold beads, An anklet |
| கட்டுவம் | காலின் நான்காம் விரலில் பெண்கள் அணியும் காலாழி; Ring worn on their fourth toe by women |
| கட்டைக்காப்பு | உள்ளே செப்புக்கட்டையும் மேலே பொன் தகடுமாக அமைந்த காப்பு; Bangles of copper rod encased in gold |
| கட்டைப்ப வுன்காப்பு | கட்டைக்காப்பு |
| கட்படாம் | யானையின் முகத்தில் அணியும் அணிகலன்; Ornamental-fillet or frontlet for blind folding an elephant |
| கணி | அணிகலன் |
| கணுநிலை மணிவடம் | நடுவில் பெரிய மணி அமைய இருபுறமும் ஒத்த அளவுள்ள இரண்டிரண்டு சிறு மணியும் பின்பு பெரியமணியும் வருமாறு கோத்த முத்துமாலை; A string of pearls as the biggest one in the center and on both sides decreasing in size |
| கணையம் | பொன் |
| கணையாழி | விரலில் அணியும் முத்திரை பதித்த மோதிரம், முத்திரை மோதிரம்; Finger ring; signet ring |
| கணையாழி மோதிரம் | கணையாழி |
| கண்சோடு | கண்மலர் |
| கண்டசரம் | பல வடிவப் பொன் மணிகளைக் கோத்துச் செய்யப்பட்ட கழுத்தணி வகை; A necklace made up of golden beads of various sizes |
| கண்டத்துடர் | கண்டநாண் |
| கண்டநாண் | கழுத்தில் அணியப்பெறும் இரத்தினங்கள் பொருத்தப்பட்ட அல்லது உருத்திராக்கமணி அணிவகை; A kind of necklace of gems or rudraksa beads |
| கண்டப்பலகை | தாலிச்சரட்டில் கோக்கப்படும் நீண்ட சதுர வடிவமுள்ள தகடு; Oblong pendants of mangalasutra |

| | |
|---|---|
| **கண்டமாலை** | கண்டசரம், கழுத்தையொட்டி அணியும் அணிவகை; An ornament for inner neck |
| **கண்டாமணி** | வீரக்கழல் |
| **கண்டாவளி** | கண்டமாலை |
| **கண்டி** | தோளணி, பதக்கம், உருத்திராக்க மாலை, கண்டசரம் |
| **கண்டிகை** | பொன்னாலான அல்லது பொற் கம்பியில் முத்துக்கோத்த கழுத்தணி வகை, கற்கள் பதிக்கப்பட்ட பொன்னாலான பதக்க அணி வகை, உருத்திராக்க மாலை, கண்டி; Necklace; Breastplate of gold set with precious stones |
| **கண்டிகை மாலை** | உருத்திராக்க மாலை |
| **கண்டு** | விரும்பிய வடிவங்களில் செய்து கழுத்தணியில் கோத்துக் கொள்ளும் ஒரு தொங்கணி, ஆபரணவுரு; Bead or something like a pendant in an ornament for the neck |
| **கண்டை** | வீரக்கழல், கிண்கிணி |
| **கண்பீலி** | கால்விரலில் அணியும் அணி; A toe ring |
| **கண்மலர்** | இறைவன் திருமேனிகளுக்கு அணிவிக்கப்படும் பொன் அல்லது வெள்ளியாலான கண் உரு; Eyes made of gold or silver put on idols of temples |
| **கதலிகை** | ஒட்டியாணம் முதலிய அணிவகையின் ஓர் உறுப்பு; A part of the girdle |
| **கத்தணம்** | கவசம் |
| **கத்திரிபாவல்** | கத்தரிபாவிலி |
| **கத்திரிபாவிலி** | மகளிர் காதின் மேற்பகுதியில் துளையிட்டு அணிந்துகொள்ளும் மணிகள் பதித்த பொன்னாலான காதணி வகை; An ornament made of gold and gems worn by women near the top of ear |
| **கந்தம்** | பொன் |
| **கந்தளம்** | கவசம் |

| | |
|---|---|
| **கப்பணம்** | ஒரு வகைக் கழுத்தணி, பொன் வளையம், சமய இரவலன் கழுத்துப் பட்டியில் அணியும் இரும்பாலான அணி, திருமணம் முதலிய சடங்குகளின் போது தீய சக்திகளிடமிருந்து காப்பதற்காக, மணிக்கட்டில் அணிவிக்கப்படும் மஞ்சள் கயிறு, காப்பு நாண்; A kind of necklace gold collar; Iron collar for the neck worn by religious mendicants; Saffron cord around the wrist worn, as an amulet or as a preliminary to the performance of certain ceremonies |
| **கப்பற்கன்மணி** | பரவ மகளிர் அணியும் கழுத்த ணிவகை; A necklace worn by parava women |
| **கம்பன் குச்சு** | ஆண்டாளின் வைரமுடியில் தொங்கவிடப்படும் குஞ்சலம்; The tassil attached to the diamond crown of Andal at Srivilliputtur |
| **கம்பி** | கம்பிகளால் பின்னப்பட்ட அமைப்புடைய காதணி வகை; Akind of ear-ring |
| **கம்பிக்கடுக்கன்** | கம்பியாற் பின்னப்பட்ட காதணி, கடுக்கன்; Ear ring formed of a wire of metal |
| **கம்பிமணி** | கம்பியால் பின்னப்பட்ட ஒருவகைக் கழுத்தணி; A kind of wire necklace |
| **கம்பை** | காதணி வகை; A kind of ear ornament |
| **கம்மல்** | பெண்கள் காதில் துளையிட்டு அணிந்துகொள்ளும் காதணி வகை; A kind of ear ring worn by women in the lobe of the ear |
| **கயில்** | கடைப்புணர்வு |
| **கயிறு** | திருமணத்தின் அடையாளமாக அணிவிக்கப்படும் சரடு, மங்கலநாண்; Mangalya |
| **கயிற்கடை** | கொக்குவாய் |
| **கரடிகை** | அணிகலனின் ஓர் உறுப்பு; A part of an ornament |
| **கரடு** | பொன், ஒருவகை முத்து; A variety of pearl |

| | |
|---|---|
| **கரண்டமகுடம்** | அடியினின்று முடிவரை படிப்படியாகச் சுற்றளவு குறைந்து நுனி குவிந்து காணப்படும் பல்வேறு மணிகள் பதித்த, பொன்னாலான தலையணி; A crown of conical shape |
| **கரண்டமுகுடம்** | கரண்டமகுடம் |
| **கரண்டிகை** | தலையணியாகிய முடியின் ஓர் உறுப்பு; Name of a part of the crown |
| **கரண்டைக்காய் மோதிரம்** | பரவமகளிர் ஒரு விரலுக்கு நாலைந்துவீதம் ஐந்து விரலிலும் அணியும் மோதிரம்; A kind of ring worn by parava women on all the five fingers, |
| **கரவளை** | கைவளை |
| **கரிணிகம்** | காதணி வகை, மகளிர் உட்கழுத்தில் அணியும் கறுப்பு மணி வகை; An ear ornament; A kind of necklace made of black beads |
| **கருகுமணி** | பெரும்பாலும் சிறுமிகளும் இளம் பெண்களும் உட்கழுத்தில் அணியக்கூடிய தொங்கலணியுடன் சேர்ந்த கறுப்பு மணிவகை; சில இனத்து மங்கல மகளிருக்கு இன்றியமையாத அணி; String of small black beads with a pendant in the center worn close fittingly around the neck by girls and young women generally. |
| **கருணதாமம்** | செவிப்பூ |
| **கருணிகை** | காதணி |
| **கருந்தனம்** | பொன் |
| **கருமணி** | கருகுமணி, நீலமணி |
| **கரும்பாசி** | கறுப்பு மணியாலான இருளர் தாலி; Black bead used as a tali by Irular women folk |
| **கருவளையல்** | குழந்தையின் கையில் அணிவிக்கப்படுவதும் கடவுள் வழிபாட்டில் பயன்படுத்தப் படுவதுமான சிறிய கறுப்பு நிறக் கண்ணாடி வளையல்; Black glass bangles worn by children as an amulet and used in rituals |
| **கருவி** | அணிகலன், குதிரைக்கலணை |
| **கருவைக்கால் கொலுசு** | காலில் அணியும் அணிவகை; A kind of anklet |

| | |
|---|---|
| கர்ணபத்திரம் | ஓலையென்னும் பொன்னாலான காதணி, தெய்வத்திருமேனிகளுக்குச் சாத்தும் காது போன்ற பொன் அல்லது வெள்ளியால் ஆன அணிகலன், Gold ear-ring fashioned after a roll of palmyra leaf worn by women; Ear-like ornament for the idols made of gold or silver |
| கர்ணபத்ரம் | காதுத்தோடு; Ear disc |
| கர்ணபூரம் | காதணி வகை; A kind of ear ornament |
| கர்ணப்பூ | காதின் மேல்பகுதியின் விளிம்பில் முருகுவை அடுத்து அணியப்படும் பெரும்பாலும் பொன்னாலான காதணி; Jewel worn at the top of the ear next to the muruku |
| கர்ணமுத்ரா | காதின் மேல் நுனியில் அணியும் மகளிர் அணிவகை; A stud worn on the upper ear |
| கர்ணவலயம் | மகளிர் காதணிவகை; A variety of ear ring |
| கர்ணிகை | தாமரை மொக்குப் போன்ற காதணி வகை; An ear ring in the form of a lotus bund |
| கர்ணோத்கீலகம் | காதின் மேல் நுனியில் அணியும் மகளிர் அணிவகை; An ornament worn on the upper ear |
| கர்ப்பூரம் | பொன் |
| கர்ஜீரகம் | மகளிர் முன்கரங்களில் அணியும் வளையல் வகை; A kind of bangles |
| கலசக்கொப்பு | மகளிர் காதின் மேற்பகுதியில் அணியும் கொப்பு வகை; Ear ornament worn by women |
| கலசப்படை | பரவ மகளிர் அணியும் காதணி வகை; An ear ornament worn by parava women |
| கலம் | அணிகலன் |
| கலம்புரி | மேகலை |
| கலவம் | பெண்கள் அணியும் கலாபம் என்னும் இடையணி; Womens jewelled girdle |
| கலனரசு | திருமணத்தின் அடையாளமாகப் பெண்கள் அணிந்துகொள்ளும் மங்கல அணியான தாலி, திருப்பூட்டு; thali the marriage badge the paramount of all ornaments |

| | |
|---|---|
| **கலன்** | அணிகலன் |
| **கலாபம்** | பதினாறு கோவைகளாலான சங்கிலிகள் தொங்கும் இடையணி; Womens zone of beads or bells consisting of 16 strands |
| **கலாபவட்டம்** | கலாபம் |
| **கலாபாரம்** | காஞ்சி முதலிய இடையணி; A girdle like kanci |
| **கலாபி** | உச்சிதிகம் |
| **கலாப்பு** | பறையர் இனத்தவர் அணிந்து கொள்ளும் காதணி வகை; An ear ornament worn by pariahs |
| **கலாவம்** | கலாபம் |
| **கலிக்கத்துரா** | முன் நெற்றியில் தொங்கும்படி மகளிர் தலையில் அணிந்துகொள்ளும் உயர்ந்த மணிகள் பதித்த பொன்னாலான அணிவகை; நெற்றிச்சுட்டி; Aigrette or spray of gems or diadem of gold or of gold set with precious stones set up as an ornament vertically over the forehead and worn by women |
| **கலிக்கத்துராய்** | தேள் கொடுக்குப் போல் உயர்ந்து தூக்கின நுனியை உடைய மகுடம், கிரீடம்; A kind of crown |
| **கலை** | மேகலை, காஞ்சியென்னும் இடையணிகள்; Womans girlde consisting of seven strands of jewels |
| **கல்** | இரத்தினம் |
| **கல்கட்டு மோதிரம்** | விலை உயர்ந்த கற்கள் பதித்துச் செய்யப்பட்ட மோதிரம்; Ring stud with costly stones |
| **கல்யாணம்** | பொன் |
| **கல்லட்டிகை** | மகளிர் கழுத்தை ஒட்டியிருக்குமாறு அணியக்கூடியதும், இரத்தினம் வைத்து இழைத்ததுமான அணிகலன்; Necklace set with precious stones |
| **கவசம்** | போரில் வீரர்கள் தற்காப்பிற்காகத் தங்கள் உடம்பில் அணிந்து கொள்ளும் உறை; Armour |
| **கவசனை** | கவசம் |
| **கவான்செறி** | குறங்குசெறி |

